திருச்சிற்றம்பலம்.

திருப்பனந்தாள்
காசிமடாதீன ஸ்தாபன கர்த்தராகிய
காசிவாசி ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள்

# பரபோகசுகவாரி பதிகப்பாமாலை.

---

இஃது

திருக்கைலாயத் திருநந்தி தேவர் பரம்பரைத் தருமபுர
வாதீனத்திருக்கூட்ட அடியார் குழாங்களிலொருவரும்
செந்தமிழ்ச்சங்கஸ்தாபகருமாகிய
சிதம்பரம் வித்துவான்
ஸ்ரீமத் சண்முக முனிவர்களாலியற்றப்பெற்று
ஷை ஆதீனம்
ஸ்ரீ சொக்கலிங்கத்தம்பிரான் சுவாமிகளால்

மயிலாப்பூர் எம்பார் அச்சிக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

---

சென்னை:

---

1914.

திருச்சிற்றம்பலம்.

திருக்கயிலாய பரம்பரை தருமபுர வாதீனம்
அடியார்குழாங்களி லொருவராகிய
வித்துவான் ஸ்ரீமத் சொக்கலிங்கசுவாமிகளியற்றிய
சிறப்புப்பாயிரம்.

---

(எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.)

சீர்மிகுங்கலியிலே யாயிரப் பதினைந்து
சேரும் ப்ரமாதீச நற்
செய்யவாண் டிற்றேளின் மதியில்பதினொன்றாய்ச்
செப்புபுத வார மதினிற்
றூர்மிகும் பனைசநகர் வாழ்சோம சுந்தரத்
தவமுனிவ ரருண்மாலை சேர்
சண்முகத் தமிழ் முனிவ னெனுநாம முற்றவன்
சன்மார்க்க ஞான மருளுங்
கார்மிகுந் தருமைவாழ் சிவஞான தேசிகன்
கருணையமு துண்டு வாழ்வோன்
கருதரிய தில்லை மாணிக்கவா சக்குரு
கான்பூசை மட தாபகன்
பார்மிகுங் காசிவாழ் விசுவேச ரருள்பெற்ற
பாக்கியன் சிம்மா சன
பதியாகு குமரகுரு பரயோகி பாதமதிற்
பாமாலை சூட்டின னரோ.

உ

திருச்சிற்றம்பலம்.

திருப்பனந்தாள் காசிமடாதீனபதியாகிய காசிவாசி

ஸ்ரீ ஆதிகுமரகுருபரசுவாமிகள்

# பரபோகசுகவாரிபதிகம்.

காப்பு.

கட்டளைக்கலித்துறை.

கூடுங்கலைமதி கூர்வாணர் போற்றும் கோன்மகிழ்ந்து
நீடும் பனசையுங் காசியுந் தானமர் நாடெனக்கொள்
பாடுங் குமரகுருபரயோகிதன் பாதமலர்
சூடுங் கவிக்குத் துணைசெயுமம்பலின் றாய்ப்பதமே.

நூல்

சீர்மிகுங் கைலாய புரியினிற் றோன்றியே
செந்தின்மா வரையிவர்ந்து
திகழுமறு முகவள்ள லாணையால் வெண்ணைநகர்
சேருமெய் கண்டதே வன்
றூர்மிகுஞ் சந்தான வரைமேவு தருமைநகர்
சார்மாசி லாமணி யெனுஞ்
சற்குருக் கடலினில் ஞானவமு துண்டுசிவ
தாள்வெளியில் சஞ்சரித்து
கார்மிகுங் காசியெனு நாட்டினிற் பெய்தருட்
கான்சாலி விளைவித்திடுங்
கருணைமிகு மேகமே யத்துவித சித்தாந்தக்
காட்சியை யளித்தா னுவாய்
பார்மிகும் பரசமய விருளழித் தொழுசைவ
பானுவே பனசை நகரின்
பதியாகு குமரகுருபரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே, (1)

சிவந்தருஞ் செந்தில்வளர் முருகவே ளருளினாற்
செப்பறு முகத்தினோ டுஞ்
சேர்ந்துநற் றந்தையாய் தப்மோடு-சித்திரை
செய்கின்ற தன்றன் மெய்யைத்
தவந்தருந் தங்கையாற் குமரகுரு பரனெனத்
தட்டிமு னெழுப்பி நாவிற்
றம்மாறெழுத்தையுந் தீட்டி தமிழ் மொழியெலாந்
தானுணரும் வரமளித்து
நவந்தருந் தம்முரு மறைத்தலுஞ் சன்னிதி
நாடி தன் றமர்களோடு
நண்ணிடக் காட்சியை நல்கிடுங் கந்தன்மே
னற்றமிழ் பொழி நாவலா
பவந்தரும் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே யனைசை நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரி யே

மின்னிடு மேகமமர் சோலைசூழ் கைலையின்
மேவுதன் றந்தை யாக
விளங்குபசு பதியினற் றாளிற் கலம்பக
விண்டமிழ் மாலை சாத்தி
மன்னிடுந் தாயாக மதுரைவாழ் மீனாட்சி
மாதரசி மகிழ வன்பால்
வழுத்துபிள் ளைத்தமிழ் மாமாலை சூட்டியே
வண்முத்த மாலை யோடுந்
துன்னிடுந் திருவருண் மாலையுங் கொண்டடி
சூழ்தரு மலைமகிப னாற்
றாவுபொன் மணிமாலை யொடுகெடற்றார்மாலை

சேரய்பாதம் புயராய னே
பன்னிடும்பரசமய விருளழித் தெழூசைவ
பானுவே பனைச நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே (3)

வீரமார் தமிழினில் வல்லகவி ராயரை
மிகுவாக்கிறற் செயித்து
வீண்வம்பு செய்திடும் புறமத வாணரை
மேல்கேள்வி யாற்செயித்து
கோரமார் மன்னரை யருணித்யால் வென்று
குருவாக வந்து ளோரை
கூறுமிகு முண்மையால் வென்றுபணிகொண்டவர்
குறும்பினை யடக்கி யுலகில்
நாரமார் குமரகுரு பரனெனு நாமமே
நாடிடும் வண்ணம் நாட்டி
நல்லபுகழ் கொண்டதமிழ் நாவலர்கள் சிங்கமே
நாயேனை யாண்டருளுவாய்
பாரமார் பரசமய விருளழித் தெழூசைவ
பானுவே பனைச நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே.
பரபோக சுகவாரி யே (4)

தானமார் மும்மலந் தாங்குபுற் பசுவெனச்
சார்களிற் றிணையடங் கத்
தண்ணருட் சங்கிலி மாட்டியே கையினிற்
றுங்குசின் முத்திரை யெனு
மோனமார் தோட்டியான் ஞானமார்க் கத்தினின்
மூந்துற நடந்து பணிசெய்

மொய்ம்பளித்தாள் குருமூர்த்தியாய்த் தருமைவாழ்
முதன்மாசி லாமணி யென்னு
மானமார் மெய்கண்ட குருராய சிங்கமுன்
வாக்குக ளடங்கி மாயை
பாய்ந்திடப் பணிசெயும் வண்மையும் பெற்றருள்
வாரிதியின் மூழ்ந்து களிறே
பானமார் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனசை நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே (5)

மந்தியார் பொழில்கள் சூழ்செந்திலார் முருகனை
வான்கயிலை வாழ்வள்ளலை
மதுரைவா ழங்கயற் கண்ணியைச் சுந்தர
வள்ளலைக் கமலைவாழ் செவ்
வந்தியார் தியாகரை மாதருமை வாழ்ந்திடு
மாசிலா மணிமூர்த்தியை
வள்ளல்புகழ் வேளூரின் வாழு முத்துக்குமர
மாமருந்தைத் தில்லை வாழ்
நந்தியார் நடராச நாதனைக் காசிவாழ்
நல்லவிசு வேசர் தம்மை
நவிறமிழ் மாலையா னூறுறக் கட்டியே
நாடுபுகழ் கொண்ட நாதா
பந்தியார் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனசை நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே
வாசமார் காசியில் வாழ்விசுவ நாதன்

மறைந்திடப்பள்ளி யாற்றி
வயிரவக்கடவுளை வாழன்ன பூரணி
மாதொடு விசாலாக்ஷியை
நேசமார் பலதேவர் வாழா லயத்தினை
நேர்ந்திடத் தன்பர் கொளவே
நீத்தணிகள் செய்மாட மாளிகை கட்டியே
நீதியில்லாம லாண்ட
நாசமார் டில்லிநகர் நாடுபா ஷாவினை
நண்ணிபல வாதியற்றி
நான்மறைக ளந்தணர்கள் வாழவின வேசர்த
நல்லபுகழ் நாட்டு மணியே
பாசமார் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனைசை நகரின்
பதியா குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே (7)

போதமாரத்துவித சித்தாந்த முத்தியே
பேரந்தறிவு பேவுமின்பப்
புந்தியால் யாவையும் பொய்யெனு மெய்யைப்
பொருந்துதன் வேடத்தினை
வாதமார் கண்ணிணைற் கண்டுளம வெறுத்துநின்
வசமகிமை காணினல் லால்
வாக்குடனிருக்கையும் வழங்கிடோ மென்றுரை
வழங்கெழிற் பாஷா வுடன்
நாதமா ரவையுளோ ரோடவணி சிங்கமே
னண்ணிபா ஷாமாத் திரம்
நடுக்கமின் றமரவருள் செய்துநா மேறுவது
நல்லுயிர்ச் சிங்கமென்னும்

பாதமார் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனைசநகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே. (8)

நாடுறும் புலமையின் மிக்கவர் தாமிவர்
நப்பிடுஞ் சைவமத மோ
நாடிடாய் பேய்மத மென்றுரை நபிகளை
நாடுபாஷாமுன் றினி
லாடுறுஞ் சுருதியி னுத்தியா னாலும்வென்
றடக்கிட வவர்க ணாணி
யறைந்திடு மனுபவக் காட்சியி னாட்டிட
வாகுமோ வென்னு மவர்சொல்
வாடுறும் படியங்கி வாய்ந்தவெஃ கேந்தியே
மாதேவ னன்றி வேறு
வாழ்தெய்வ மில்லையென் றோதிபாஷாவினால்
வான்வீர கண்டை கொண்ட
பாடுறும் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனைச நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரியே (9)

நல்கிடுங் கல்வியா னாற்பெரும் பேறுறு
நவில்பொருட் செல்வமதனால்
நாடறத்தோடுபொரு ளின்பமு நண்ணிடும்
நாட்டினி லென்று ரைக்கும்
புல்கிடு மொழியினைப் பூதலத் தென்றும்
பொருந்திட நாட்டி யிமையைப்
பொருவரை முதற்கன்னி யாகுமரி வரையுமே

புகழுறும் பொருளீட்டியே
மல்கிடுங் கல்வியால் வண்டமிழ் நூலொடு
வானருட் செல்வமீட்டி
மாளாத பேரின்ப வானமுத மூட்டிடும்
வள்ளலே யெனையாளு வாய்
பல்கிடும் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனைசை நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரி யே (10)

காருறும் வேதமுட னாகம புராணமா
நற்கலைக ளென்றும் வாழ்க
நவிலுமத் துவிதசித் தாந்தமுத் தியினையே
நாடுசிவ யோகர் வாழ்க
காருறும் பொழிறருமை வாழ்பாசி லாமணிக்
காண்குரவர் மரபு வாழ்க
கருணைமிகு நின்மரபு காத்திடும் பெருமையார்
கனமுனிவ ரென்றும் வாழ்க
தாருறும் பனைசை நகர் வாழ்சோம சுந்தரத்
தண்கலா நிதியு நின்போல்
தருமமுட னுயுளுங் கருணையு மோங்கிச்
சதானந்த முண்டு வாழ்க
பாருறும் பரசமய விருளழித் தெழுசைவ
பானுவே பனைசை நகரின்
பதியாகு குமரகுரு பரஞான சிங்கமே
பரபோக சுகவாரி யே (11)

முற்றிற்று.